* அநியாயமாய் வந்த அதிக வருமானத்திலும், நியாயமாய் வந்த கொஞ்ச வருமானமே உத்தமம்.
* பொன்னைச் சம்பாதிப்பதிலும் ஞானத்தை சம்பாதிப்பது எவ்வளவு உத்தமம்! வெள்ளியைச் சம்பாதிப்பதிலும் புத்தியைச் சம்பாதிப்பது எவ்வளவு மேன்மை!
* இனிய சொற்கள் தேன்கூடுபோல் ஆத்துமாவுக்கு மதுரமும், எலும்புகளுக்கு ஒளஷதமுமாம்.
* சண்டையோடேகூடிய வீடுநிறைந்த கொழுமையான பதார்த்தங்களைப் பார்க்கிலும், அமைதலோடே சாப்பிடும் வெறும் துணிக்கையே நலம்.
* வெள்ளியைக் குகையும், பொன்னைப் புடமும் சோதிக்கும்; மனதுகளை அவன் நடையை சோதிக்கும்.
* குற்றத்தை மூடுகிறவன் சிநேகத்தை நாடுகிறான்; கேட்டதை சொல்லுகிறவன் பிராண சிநேகிதரைப் பிரித்து விடுகிறான்.
* மாறுபாடான இருதயமுள்ளவன் நன்மையை கண்டடைவதில்லை; புரட்டு நாவுள்ளவன் தீமையில் விழுவான்.
* அறிவாளி தன் வார்த்தைகளை அடக்குகிறான்; விவேகி குளிர்ந்த மனமுள்ளவன்.
* அழிவு வருமுன் மனுஷனுடைய இருதயம் இறுமாப்பாயிருக்கும்; மேன்மைக்கு முன்னானது தாழ்மை.
* தரித்திரன் கெஞ்சிக் கேட்கிறான்; ஐசுவரியவான் கடினமாய் உத்தரவு கொடுக்கிறான்.
* மாறுபாடான உதடுகளுள்ள மூடனைப்பார்க்கிலும், உத்தமனாய் நடக்கிற தரித்திரனே வாசி.
* மனுஷனுடைய மதியீனம் அவன் வழியைத் தாறுமாறாக்கும்.
* செல்வம் அநேக சிநேகிதரைச் சேர்க்கும்; தரித்திரனோ தன் சிநேகிதனாலும் நெகிழப்படுவான்.
* பிரபுவின் தயவை அநேகர் வருந்திக் கேட்பார்கள்; கொடை கொடுக்கிறவனுக்கு எவனும் சிநேகிதன்.
* பிரபுவின் தயவை அநேகர் வருந்திக் கேட்பார்கள்; ॥
* மனுஷனுடைய விவேகம் அவன் கோபத்தை அடக்கும்; குற்றத்தை மன்னிப்பது அவனுக்கு மகிமை.
* கிண்டல் காரனை அடி அப்பொழுது பேதை எச்சரிக்கப்படுவான், புத்திமானைக் கடிந்துக் கொள், அவன் அறிவுள்ளவனாவான்.
* மனுஷனுடைய இருதயத்திலுள்ள யோசனை ஆழமான தண்ணீர் போலிருக்கிறது; புத்திமானோ அதை மொண்டெடுப்பான்.
* தூக்கத்தை விரும்பாதே, விரும்பினால் தரித்திரனாவாய்; கண்விழித்திரு அப்பொழுது விரும்புவது பெறுவாய்.
* காயத்தின் தழும்புகளும், உள்ளத்தில் உறைக்கும் அடிகளும், பொல்லாதவனை அழுக்கறத் துடைக்கும்.
* பொய் நாவினால் பொருளைச் சம்பாதிப்பது சாவைத் தேடுகிறவர்கள் விடுகிற சுவாசம் போலாகும்
* ஏழையின் கூக்குரலுக்குத் தன் செவியை அடைத்துக் கொள்ளுகிறவன், தானும் சத்தமிட்டுக் கூப்பிடும் போது கேட்கப்படமாட்டான்.
* சண்டைக்காரியும், கோபக்காரியுமான ஸ்திரீயுடன் குடியிருப்பதைக் காட்டிலும் வனாந்தரத்தில் வாழ்வது நலம்.
* தன் வாயையும் தன் நாவையும் காக்கிறவன் தன் ஆத்துமாவை இக்கட்டுகளுக்கு விலக்கி காக்கின்றான்.
* விவேகி ஆபத்தைக் கண்டு மறைந்துக் கொள்ளுகிறான், பேதைகள் நெடுகப் போய் தண்டிக்கப்படுகிறார்கள்.
* பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து; அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான்.
* பணக்காரன் ஏழைகளை ஆளுகிறான்; கடன் வாங்கினவன் கடன் கொடுத்தவனுக்கு அடிமை.
* அநியாயத்தை விதைக்கிறவன் வருத்தத்தை அறுப்பான்; அவன் உக்கிரத்தின் மிலாறு ஒழியும்.
* பரபெண்களின் வாய் ஆழமான படுகுழி;
* கொள்ளிகளையும் அம்புகளையும் சாவுக் கேதுவானவைகளையும் எறிகிற பைத்தியக்காரன் எப்படி இருக்கிறானோ— அப்படியே, தனக்கடுத்தவனை வஞ்சித்து நான் விளையாட்டுக்கல்லவோ செய்தேன் என்று சொல்லுகிற மனுஷனும் இருக்கிறான்.
* கரிகள் தழலுக்கும், விறகு நெருப்புக்கும் ஏதுவானது போல, வாதுப்பிரியன் சண்டைகளை மூட்டிவிடுகிறதற்கு ஏதுவானவன்.